வே று.

எண்பயிலு நெடுஞ்சடிலம் பிறங்குதலா லிலங்கிவனுக்
கொண்புவியோர் கொண்டாடு முபநயனத் திருநாம
மண்பரவு கோச்சடில வருமனென லியையுமென
விண்பரவ விளங்குவித்தான் [1]விதுகுடுமிப் பெருவழுதி. (அ)

ஆகத்திருவிருத்தம் - உருகூ.

---

## கக.—வளைவேல் செண்டுகொடுத்த திருவிளையாடல்.

[2]முன்ன மிந்திரன் கடல்வட மேரு முந்துதம் வல்வினை வசத்தான், மன்னு நம்முய ராணையைக் [3]கடப்பர் மதித்தொவ்வொர் காலத்தி லென்று, பின்னர் யாவையு முணர்பவ னதனைப் பேரருட் டிருவுளத் துணர்ந்து, சொன்ன மூவர்தம் பெருவலி தொலைப்பான் சோர்வறச் சிறிதுளே முனிந்து. (க)

வே று.

அறமலி தனது புதல்வனுக் கிரனுக் கருள்சுரந் தரும்புக ழோங்க, மறுவிலோர் வளையை யிந்திரன் பெரிய மவுலியி லறையென வளித்துச், செறிகடல் வலியை யறவெறி யென்று சிறந்ததோர் வேலினை நல்கி, யறிவட கிரியைப் [4]பந்துபோற் சுழல வடியெனச் செண்டையுங் கொடுத்தான். (உ)

ஆதிமா மரபின் வருவடி வணங்கை யறநெறி மணம்புணர் வித்துக், காதல்கூர் தறத்தின் றகுதிசேர் புவனக் கனமெலா மவன்றலை வைத்து, நீதிமூ வுலகு மதிசயித் திரங்க நிறைமலி தடாதகை யோடு, மாதர முறுங்க ணதிப ரோடு மறைந்தனன் பிறங்கவா லயத்து. (ங)

---

அ. சடிலம் - சடை. கோச்சடிலவருமரென்னும்பெயர் சிலாசாசனத்திற் பரக்கக்காணப்படுகின்றது. விதுகுடுமிப் பெருவழுதி - சுந்தரமாறர்.

(கக)

க. காலத்திற் கடப்பர். மூவர் - இந்திரன், கடல், மேரு. இச்செய்யுள் கருத்துடை யடைகொளணி.

உ. வளை, செண்டு என்பன ஆயுத விசேடங்கள். அறி வடகிரி - எல்லாராலும் அறியப்படும் மேரு.

ங. 'வடிவணங்கு' என்பது பெயர்; கணதிபர் - கணங்களின் தலைவர்.

(பி - ம்.) [1]'விதுக்குடுமி' [2]'முன்னு மிந்திரன்' [3]'கடப்பர்கண்' [4]'கந்துகம் போலவடியென'

வே று.

ஆண்டகை தெய்வ வீரெட் டாண்டணி மவுலி சூடித்
தூண்டுமா வரசர் போகந் துய்த்துல காள லாலே
பூண்[1]டபி டேகச் சொக்கன் புழுகுநெய்ச் சொக்க னென்னு
மீண்டுயர் நன்கு மங்க ளெங்கணும் [2]பிறங்கு மாலோ. (௪)

மன்னவர் முடிக வித்து மருவிய கணங்க ளோடு
நன்னெறி யோங்க நாடோர் நகரென ஞாலங் காண
வின்னர சாள லாலே யமன்றிசை யாய வெய்ய
தென்னவன் பாண்டி நாடு சிவலோக மான தன்றே. (ரு)

ஆகத்திருவிருத்தம் - உ௪௪.

---

## ௧௨.—நான்மாடக்கூடலான திருவிளையாடல்.*

சீலமார் வருண ராசன் றிறத்தினுன் முன்னோர் கால
மாலவா [3]யழகார் மெய்யன் பெருமையை யறிவா னெண்ணி
ஞாலநீ கைக்கொ ளென்று நளிபுனற் பெருந்த ரங்க
[4]வேலையை யேவ வேலை வேலைநல் வேலை யென்று. (௧)

உரனொடுங் [5]கணைத்துப் போதி ஞெலித்துல கனைத்துங் கொள்ள
வரனுறு தேவர் சித்தர் மானிடர் நாகர் முற்றும்
வெருவரு முள்ளத் தோடு மாலவாய் மெய்யன் செய்ய
திருவடி சரண மென்று வுய்யலா மென்று சேர்ந்தார். (உ)

காலமல் லாத காலத் துததிவா னுறக்க வித்து
மேலெழ வாரா நின்ற தென்செய்கோம் விண்ணோர் கோவே

---

௪. அபிடேகச்சொக்கன் - கிரீடத்தையணிந்த சொக்கநாயகர்; அபிடேகம் - கிரீடம்; வைஷ்ணவஸம்பிரதாயத்திலும் இப்பெயர் இப்பொருளில் வழங்குகின்றது. 'அபிடேகச் சொக்கர்' (மதுரைக்கல. ௪௪, ருங); 'புழுகு நெய்ச் சொக்கர்' (மதுரைக்கல. ருஉ, ருங; மீனுட்சி. பிள்ளை. ஊசல், ௧ - ௧0).

ரு. இச்செய்யுள், "அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த, வப்பார் சடையப்பன்" (திருவா. திருவம்மானை, ௧௧) என்னும் திருவாக்கின் பொருளைத் தழுவியது.

(௧உ)

௧. 'வேலையையேவ...வேலை' மடக்கணி; வேலை-கடல், காலம், தொழில்.

உ. கொள்ள - கடல்கொள்ள.

*"உம்பரு நாக ருலகந் தானு மொலிகடல் சூழ்ந்த வுலகத் தோரு, மம்புத நால்களா னீடுங் கூட லாலவா யின்க ணமர்ந்த வாறே" (தே).

(பி - ம்.) [1]'அவிடேக' [2]'பிறங்கிற்றன்றே' [3]'அழகார்சொக்கன்' [4]'வேலையையேயவேலை' [5]'கணைத்தினுலித்துலகனைத்தினையுங்கொள்ள'

யேலவே யருள்செய் யாயே விறப்பமிங் கெவரு ஞாலஞ்
[1]சாலமுற் றுங்கா லத்து நீயலா லுண்டோ தம்பம். (௩)

என்றடி தொழுது வீழ்ந்து முறையிட விரங்கி யென்று
மொன்றிய வடியார் தங்க[2]ளுறுகுறை தீர்ப்பான் கண்டு
பொன்றுமுன் காப்ப லென்றே புட்கலா வருத்த முன்னா
வென்றிகொ ணான்கு மேக வேந்தரை வரவ ழைத்தான். (௪)

தக்கபே [3]ரணுக்க ளுய்யத் தரங்கவெங் கடனீர் முற்றும்
புக்குநீர் மாந்து மென்று புகலுமுன் போற்றி செய்து
சொக்கனா ணையைநி னைந்தே சுவறிடக் குடிப்பக் கண்டு
மிக்கவிண் ணோர்கண் முன்னா வியந்தனர் பயந்த ணிந்து. (௫)

அப்பொழு ததிச யித்தவ் வருணன்மீண் டாங்கா ரித்துத்
தப்பருந் தன்கொண் மூக்க டமையெலாம் வரவ ழைத்து
மைப்பனை யனைய நுந்தம் வள்[4]ளுறை சிதறி யந்தச்
செப்பரு முயிரை யெல்லாம் வருத்திடு மெனச்சி வந்தான். (௬)

பீடுசேர் முகில்கள் சாய்க்கும் பெரு[5]மழைத் துளியால் யாரும்
வாடுதல் கண்டு தொல்லைப் புட்கலா வருத்த முன்னா
நாடருங் காம ரூபப் புயல்களை நான்கு மாடக்
கூடம தாகக் கற்பித் தருளினன் [6]கூடமில்லான். (௭)

சோதிசேர் [7]பாதா ளத்தர் துறக்கரந் [8]தரத்தோர் பாரோ
ரேதநீ ருருதி யாரு மியைந்தநான் மாடத் தும்போய்
வீதியி னெருக்க மின்றி மேதகு புதல்வ ரோடு
மாதர மாது ரோடு மிருமென வருள்சு ரந்தான். (௮)

---

௩. எவரும் இரப்பம். தம்பம் - பற்றுக்கோடு; "தம்பத்தினை நீந்தித் தொரு வேள்விதொடங்குந், தக்கன்" (தத்துவ. பிள்ளை. சிற்றில். ௫).

௪. மேகங்கள் நான்குவகை; "மேக்கு நால்வகை மேகமுங் கீழ்விழ" (கம்ப. சுந்தர. ஊர்தேடு. ௧௪௪.)

௫. அணுக்கள் - உயிர்கள்; "சிவனலால், அன்னை யொப்ப வணுக்கட்கு நல்லவர், பின்னருஞ் சிலருண்டோ" ௩௪: ௧௧.

௬. கொண்மூக்கள் - மேகங்கள். மைப்பனை - கரியபனை. வள்ளுறை - பெரியதுளிகள்; "வள்ளுறை சிதறி" ௱௩. ௮.

௭. 'கூடம...கூடமில்லான்' மடக்கணி. கூடம் - மாடத்தின் மேற்பாகம்; வஞ்சனை; "அம்புத நால்களா னீடுங்கூட, லாலவாயின் கணமர்ந்தவாதே' (தே. திருஞா.)

௮. நீர், முன்னிலைப்பன்மை. ஆதரம் - அன்பு. இரும் - இருங்கோள்.

(பி - ம்) [1]'சாலநாமுறுங்காலத்து' [2]'உறுதுயர்' [3]'மனுக்களுய்ய' [4]'உறை சிந்தி' [5]'மழைத்தளியால்' [6]'கூடலில்லான்' [7]'பாதளத்தர்' [8]'அந்தரத்தர்'

அப்பொழு தெவரும் போற்றி யணுகிமா நகரின் பாங்க
ரொப்பிலா [1]வடைவிற் பொங்கு முயர்ந்தமா டங்க டம்முண்
மெய்ப்பட நயந்தி ருப்ப மின்னிடி முழக்க மிக்க
மைப்படு கருவி வான மழைவலி தொலைந்த தன்றே. (கூ)

[2]பேசரும் புயல கத்துப் [3]பெரும்புயல் சுவறக் கண்ட
வாசைசேர் வானோர் முன்னு வதிசயித் தச்ச நீங்கித்
[4]தேசிருங் கங்கை யாற்றைத் திருச்சடைப் [5]புரையுட் டேக்கு
மீசனுக் கிதுவு மொன்றே யெனத்துதித் திறைஞ்சி னார்கள். (கo)

அருளினன் அவரைத் தத்தம் பதியகத் தணைய வேவி
வரிசையி னிருப்பக் கண்ட வருணன்வெந் திறம்விட் டஞ்சிப்
பெரியவ சிறியேன் செய்த பிழைபொறுத் தருளென் றன்பிற்
றிருவடி பரவி நாளிற் றிகழுளம் வாழ்ந்துபோனான். (கக)

வாடுவோர் [6]தம்மைப் போற்ற வயங்கொளி மாநகர்க்கட்
கூடரு மேக நான்கு மாடமாக் கூட லாலே
நாடவ ரதிச யிப்ப நான்மாடக் கூடலென்று
பீடுடை நகர்க்கு நாம மெங்கணும் பிறங்கிற் றன்றே. (கஉ)

வேறு.

கொண்மூ மாடங்கள் [7]கூடலின் மீறியு
நண்ணி நீள்கடல் கொள்ளா [8]நகரிதான்
மண்ணின் [9]மாடக் குளக்கீழ் மதுரையென்
றெண்ணில் காலத் [10]திலங்கிய தெங்கணும். (கங)

"ஆடுபவர்......கூடனகரே" (ரு-ஆம் பக்கத்திற் பார்க்க.)

ஆகத்திருவிருத்தம் - உருஎ.

---

கூ. கருவி - நீர், மின்னல் முதலியவற்றின் தொகுதி.

கo. முதலடி மடக்கணி. புயல் - மேகம், நீர். ஆசை - திசை. சடைப்புரை - சடையின் உள்வெளி.

கக. "பிழைத்தவை பொறுக்கை யெல்லாம் பெரியவர் கடமை போற்றி" (திருவா. திருச்சத. சுசு), "பொறுப்பரன்றே பெரியோர் சிறியோர் கடம்பொய் யினையே (ஷை நீத்தல். சு)

கஉ. போற்ற - பாதுகாத்தற்கு.

கங. கொண்மூ:விகாரம். மாடக்குளக்கீழ்மதுரை: மாடக்குளமென்பது மதுரைக்கு மேற்கேயுள்ளதோரிடம்; அவ்விடத்தில் ஒருகுளமுண்டு; 'மாடக் குளம் பெருகினால் மதுரைபாழ்' என்று ஒருபழமொழி வழங்கிவருகிறது.

(பி - ம்.) 1'இடையிற்பொங்கும்' 2'பேசரும்புயலாகத்துப்பெரும்பெயல்' 3 'பெருமழை' 4'தேசுறுங்கங்கை' 5'புரைக்கட்டேக்கும்' 6'தம்மைப்போற்றி' 7 'கூடலினீரினும்' 8'நகரினை' 9'மாடக்குழற்கீழ்' 10'இயங்கியது'

## கக.—சித்தரான திருவிளையாடல்.

[1]அருவ மெய்யின னாலவாய் நாயகன்
கருதி முன்னமோர் காலங் கருணையின்
மருவி யாவருங் கண்டு மகிழ்வுறப்
பொருவில் [2]சித்த வுருவம் புனைந்தனன். (க)

விண்வி ரும்ப மறலியை [3]வென்றுநீள்
கண்ணு மன்பரை யாளுங் கழன்மிசை
வண்ண நண்ணி [4]மனோகர மாகிய
பண்ண மைந்த பரிபுரஞ் சாத்தினான். (உ)

கற்ப வெங்கனற் கண்ணுடை நெற்றிமே
னிற்ப விட்ட [5]திலக நிலாவிடச்
சற்ப மாலை தயங்க மனங்கவர்
பொற்பு யத்துறு பொக்கணந் தூக்கினான். (ங)

மெய்யிற் பூசிய நீறும் விளங்குசெங்
கையின் மாத்திரைக் கோலுமென் காதின்மேற்
செய்ய முத்திரை யுந்[6]திரு வானவொண்
டுய்ய குஞ்சிச் சடையுந் துளங்கவே. (ச)

யோக பட்டம் விளங்க வுளங்கவ
ராக முற்று மழகு பொழிந்திடப்
பாக முற்ற பரிவுடை யாளையுட்
போக விட்டு நடந்தனன் பூமிசை. (ரு)

ஆழி மண்கட வாம னிறுத்திய
தாழ்வில் சித்தன் றமனிய வெற்பின
னூழி யுள்ளவ னோங்[7]குலோ கங்களை
யீழ மாக்குவன் [8]யாருளர் காணவே. (சு)

---

உ. வென்று நீள்கழல், ஆளும் கழலென்க. மனோகரம் - மகிழ்ச்சி.

ங. சற்பம்=சர்ப்பம் - பாம்பு. பொக்கணம் - ஒருவகைப்பை; "சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கம்" (திருச்சிற். உசஉ) எனவும், "சுட்ட வெண்பொடிப் பொக்கணந் தாக்கிய தோளும்" (திருவிளை. எல்லாம். ங) எனவும் வரும்; "பொக்கணச் சித்தன்" என்பர்; பின், கக.

ச. முத்திரை - அடையாளம்; சித்தவேடத்திற்குரியகுண்டலம். குஞ்சிச்சடை - சிறுசடை.

சு. ஆழிமண்கடவாமல்-கடலானது மண்ணைக்கடவாமல். ஈழம் - பொன்.

(பி - ம்.) 1'அரவமெய்யினன்' 2'சித்தருருவம்' 3'வென்றநீள்' 4'மனோரதம்' 5'திலதம்' 6 'திருவானவெண் டுய்யமுண்டச்சிரமுங்' 7 'உலகங்களை' 8 'யாவருங்காணவே'

ஆதி நாத னறிவ னெனச் சொலீஇத்
தோதக கம்பல காட்டித் தொகுபுகழ்
மாது மேவு மதுரைத் திருநகர்
வீதி தோறும் வெளிப்பட் டுலாவினன். (௭)

வேறு.

விருத்தரை மைந்த ராக்கி மைந்தரை விருத்த ராக்கிக்
கரப்பெருங் குன்றை யைய கடுகினு ளடக்கிக் காட்டி
யுருத்திக ழம்ப லத்தை விழுங்கிடா வுமிழ்ந்து காட்டி
மரித்தெழுந் திருந்து காட்டி மற்றும்வல் லபங்கள் காட்டி. (௮)

மன்னிய சிறுவர் சூழ்ந்து வரவிளை யாடி யாரு
1மின்னருள் சேர்ந்த காந்தன் யாவனென் றதிச யிப்பக்
கன்னிமா தரைம யக்கிக் கடிமனை தொறுங்கு ழப்பித்
தென்னனை மதியா னாகி நடித்தனன் றெய்வச் சித்தன். (௯)

பொற்பமர் தரங்க வாரிப் புடவியை யடைவிற் காக்கும்
விற்பொலி தடக்கை வேந்தன் வெய்யதன் மனித ராலே
நற்றவன் சரிதை முற்று நாடொறு முரைப்பக் கேட்டு
2முற்றிய சீற்றங் கூர்ந்து விட்டனன் முறைசெய் வோரை. (௧௦)

பொக்கணச் சித்தன் றன்னைப் பொய்செய்து போகா வண்ண
மிக்கணம் பிடித்து வாரு 3மென்றுமுன் னேவப் போனோ
ரக்கணத் தின்கட் கண்டு பிடித்தனு மகப்ப டாமற்
றக்கர மொக்கச் செப்பித் தப்பினன் வெற்றிச் சித்தன். (௧௧)

தப்பினன் மற்றோர் ஞான்று சங்கரன் விரும்பி வாழு
மப்பெருங் கோயி றுங்கி யனிலமார் மூலை மன்னு
மொப்பருஞ் சிறப்பின் மிக்க வுத்தமக் களிற்றின் முன்னர்
மெய்ப்பட விருந்தான் வந்து வியன்றிரு நோக்கா னோக்கி. (௧௨)

---

௭. ஆதிநாதன் - நவசித்தர்களில் ஒருவர்; சிவபெருமானென்பது மற்றொருபொருள். 'ஆதிநாதர்' (௪௮:௧௮.) தோதகம் - துன்பம்.

௮. கரப்பெருக்குன்று - யானை. ஐய - சிறிய. அம்பலம், சிலேடை.

௯. காந்தன் - தலைவன். குழப்பி - குழம்பச்செய்து.

௧௦. முறைசெய்வோர் - ஏவலாளர்.

௧௧. பொக்கணம்: ௩-ஆம்பாட்டின் குறிப்பைப்பார்க்க. தக்கரம் = தஸ்கரம் - கள்ளத்தன்மை.

௧௨. அனிலமார்மூலை - வாயுமூலை.

(பி - ம்.) 1 'இன்னருட் சார்ந்தன் காந்தன்' 2 'முற்செறிசீற்றங்' 3 'என்றுழையேவப்'

8

தக்கபே ரால யத்துச் சதுமறை முனிவர் வாழ்த்தச்
சொக்கநா யகனைச் சூழ்ந்து துதிசெய்து தொழுவான் போந்த
திக்கெலாம் புகழு மன்னன் சேருங்கான் முன்னர்க் கண்ட
மிக்கவேத் திரக்க ரத்து வெய்ய [1]கஞ்சுகியர் சீறி. (கங)

பாண்டிய னிறைவன் றன்னைப் பணிகுவா னடைந்தா னீற்றுப்
பூண்டகு முண்டி யேடா போய்விடு போய்வி டென்ன
வாண்டகை கேளான் [2]போல வசைவிலா திருப்ப வங்கட்
டிண்டருந் தூய மேனிப் பாண்டிய வேந்தன் சேர்ந்தான். (கச)

இனியதாண் மலரே றிட்டு முறுவல்கொண் டிருப்பக் கண்ட
வநுபமன் [3]செழியன் மாற னணைந்தபே ரிளமை யாலே
தனைநனி மதித்து நீயார் [4]தரித்தெழா திருந்த தேது
நினைவுதா னேதூ ரேது வல்லதே தென்று னீத்து. (கரு)

ஆங்கது பகர வேடா வணைந்தகா ரியத்தி னேகா
[5] தீங்கிவை யுரைத்த தென்கொல் யானெலாம் வல்ல சித்த
னோங்கிய வுலக மெல்லா மதித்தவ னுன்ற னக்கென்
பாங்குகா ரியமோ வில்லை யென்றுபற் றற்றி ருந்தான். (கசு)

திறமுறு [6]முனிவீ ரென்னத் திருவிளை யாட றன்னைக்
குறுமறை முனிவ வின்று கூறிய வாறு கேட்டே
மறமலி திறத்து மன்னன் வரமதி யாதி ருந்த
வறமலி சித்தன் பின்னென் செய்தன னறைதி யென்றார். (கஎ)

ஆகத்திருவிருத்தம் - உஎச.

---

கங. வேத்திரம் - பிரம்பு. கஞ்சுகியர் - சட்டையிட்ட பிரதானிகள்.

கச. பூண்தகும் நீற்று முண்டி - அணியத்தக்க திருநீற்றாலாகிய திரிபுண்டரத்தையுடையாய். ஏடாவென்பது ஆண்பால் முன்னிலைப்பெயர்; இழிந்தோனை விளித்தற் கண்ணும்வரும்; "ஏடாவேடா வென்னேழை, தன்னை வதைத்தாய் நீயேயென்று" (திருவிளை. பழியஞ்சின. கச.)

கரு. அநுபமன் - ஒப்பில்லாதவன். செழியன்மாறன் என்னும் பெயரைச் சிலாசாசனத்திற் பரக்கக்காணலாம். நீத்து - வெறுத்து.

கசு. சித்தர் அரசனை நோக்கி ஏடாவென்றார், அவன் தம்மை ஏடாவென்றது பற்றி. மதித்தவன் - மதிக்கப்பெற்றவன். என்பாங்கு - என்னிடம்.

கஎ. என்ன - என்று அகத்தியமுனிவர் சொல்ல.

(பி - ம்.) [1]'காஞ்சுகியர்' [2]'போலுமசை' [3]'செழிய மாறன்' [4]'தனித்தெதிரிருந்த' [5]'தீங்கெலாம்' [6]'இதையைந்ததிருவிளை'

## கச.—கல்லானை கரும்புவாங்கின திருவிளையாடல்.



மன்னு நீள்புகழ் வழுதிகண் டெமைமதி யாமன்
முன்னர் யாவையும் வல்லவன் யானென மொழிந்தான்
பின்னெ ராசையற் றிவன்றிறம் பெரிதறி வோமென்
றுன்னை யொப்பவ [1]ரில்லையோ வுயர்ந்தவ ருலகில். (க)

இத்த லத்துய [2]ராக்கினைச் சித்தனு யிருப்பின்
வித்தை தோன்றவிக் கோயிலின் வெஞ்சிலைக் களிற்றுற்
சித்த நன்குறச் செப்பிய வாறுபோ லெனது
கைத்த லத்தமர் கன்னலை வாங்குவி காண்பேம். (உ)

இன்று தானிது தின்றிட வேவினை யாயி
ஞென்று தாழ்வற வுனக்கியாம் வேண்டுப வளிப்ப
மன்று ளாடிய மாசிலா நாயக னறிய
வென்றி நாதனீ யெமக்கென விளம்பினன் விளங்க. (ங)

வே று.

தென்னன் வார்த்தையைச் சித்தனுங் கேட்டலுந்
தன்னு ளேநகை செய்து சடக்கென
முன்னர் நின்ற [3]முதியகல் லானையைக்
கன்ன றின்னென வேவினன் கண்கொடு. (ச)

அங்க ணேவ வழல்விழித் தஞ்சமண்
டங்கு நீழலைச் சாடிமுன் காட்டுகைப்
பைங்கண் வேழத்தைக் [4]காணுமுன் பாய்மதச்
செங்கண் வேழ [5]மடர்ந்து செறுத்ததால். (ரு)

பத்தி மன்னவன் பாணிக் கரும்பினைப்
புத்தி யாரு நயந்து புகழ்ந்திடச்
சித்த னேவிய தெய்வப் பெருந்திற
லத்தி வாங்கி விரைவி னயின்றதால். (சூ)

---

க. ஆசையற்றுமொழிந்தான். அறிவோமென்று அரசன்கருதி.

உ. ஆக்கினைச்சித்தர் - ஏவலினால் எல்லாம் செய்விப்பவர்; இஃது, எல்லாம்வல்ல சித்தமூர்த்தியின் திருநாமமாகவழங்குகின்றது. நன்குற - தெளிய. களிற்றால் வாங்குவி.

ச. சடக்கென: ஒலிக்குறிப்பு; சடக்கெனத் தின்னென இயைக்க; "சடக்கென வாங்கயின்று" (அ.) விரைவாகவென்றுமாம். கண்கொடு ஏவினன்.

ரு. அழல் விழித்து - தீப்புறப்பட விழித்து. கண் - கணு, விழி. வேழம்-கரும்பு, யானை.

சூ. "நதிமதந் தறுகண் புகர்கொலை மறுத்த, கல்லிப மதனைக் கரும்புகொள வைத்த, வாலவா யமர்ந்த நீலநிறை கண்டன்" (கல். ருரு)

(பி - ம்.) 1 'இலையிலையுயர்ந்தவருலகில்' 2 'அருச்சனைச்' 3 'முதுகல்யானை' 4 'கண்டுமுன்' 5 'தொடர்ந்து செறுத்ததால்'

தந்து மேவிய தாமரை நாளமென்
றிந்து மன்னவ னேகா [1]வலியையும்
வந்து வாங்க மறம்படக் கொல்வமென்
றுந்து வீரர்க [2]ளோவெனச் சென்றனர். (எ)

வாங்கு முன்னர் மணிமுத்த மாலையை
யோங்கு மும்மத நால்வா [3]யுவாமலை
தாங்க ருஞ்சினத் தோடு சடக்கென
வாங்க யின்றிடி யென்ன வதிர்ந்ததால். (அ)

மன்ற லந்தொடை மன்ன னழன்றுளம்
வென்றி சித்தர்க் கழகிது மேம்பட
நன்று நன்றென நாணினன் பேணிமுன்
சென்ற வீரரு நின்று செறுத்தனர். (கூ)

அங்க டர்ந்தவர் தம்மை யடர்ந்துமெய்
தங்கு நீற்றினன் சற்று நகைத்துமண்
ணெங்கு மோங்க விமைப்பி னொளித்தனன்
பைங்கண் வேழமும் பண்டைமெய் கொண்டதால். (கo)

அரச னஞ்சி யதிசயித் தன்புடைப்
பெரிய கோயிற் பெருமான் பணியென
மருவு கோபந் தணிந்து வரையறப்
பரசி வான்மிசைப் பன்முறை பார்த்தனன். (கக)

ஆல யத்து ளணைந்து வணங்கிமுன்
சால வேண்டுப நல்கித் தலத்துநின்
போல யாவர்வல் லாரெனப் போற்றினன்
ஞால மெங்கு நயந்து வியந்ததால். (கஉ)

ஆகத்திருவிருத்தம்-உ அசு.

---

எ. தந்து - நூல். நாளம் - தண்டு. ஏகாவலி - ஒற்றைவடமாகிய முத்த மாலை.

கூ. உளமழன்று. சித்தர்க்கு வென்றி.

கக. சோமசுந்தரக்கடவுளின் ஆலயத்தை யாண்டும் பெரியகோயிலென் பர். பணி - திருவிளையாடல், ஆணையுமாம்.

(பி - ம்.) [1]'வடத்தையும்' [2]'ஒல்லென' [3]'உயர்மலை'

# கரு.—சங்கப்பலகைகொடுத்த திருவிளையாடல்.*



முன்னமோர் காலஞ் சங்கமண் டபத்து முறைமையி னிருப்ப தற் [1]கியைந்தே, மின்னிய பனுவற் [2]காரணமாகி விளங்குபே ராசனம் விரும்பிப், பன்னியல் வாணர் கபிலர்நக் கீரர் பரணர்முன் னாகவா லயத்துத், தொன்னெறி யடியார்க் கினியன கொடுக்குஞ் சொக்கனுக் குரைப்பமென் றடைந்தார். (க)

தேவர்க டேவே நின்னரு ளிருக்குஞ் செந்தமி ழோர்நெருக் கின்றி, யாவரு மிருக்கச்சிறக்குமோர் தவிசையீந்தரு ளெனத்தொழுதேத்த, மூவர்க டலைவன் கோணமொத் திலங்கோர் முழத்தினி னொருவரே யிருக்கும், பாவறி ஞானப் பலகையொன் றளிப்ப வாங்கிய பாவலர் பகர்வார். (உ)

அருளுடை யரசே யாவரு மிருந்திங் காயநீ டாசனம் விரும்ப, வொருவரே [3]யிருக்கு மாசனந் தந்த தென்னையென் றுளந்தளர் காலை, யிருமையி னிலங்கும் புலவரை யறிந்தீ [4]திடந்தரு மிடந்தரு மென்றோர், பரிவுடை வாக்கு விசும்பிடைத் தோன்றப் பணிந்ததி சயத் தொடும் போந்தார். (ங)

---

க. இயல்வாணர் - புலவர்கள்.

உ. தவிசு - ஆசனம். கோணம் - சதுரம். பாஅறி ஞானப்பலகை: பதி: உ; கக: அ.

ங. ஆய - ஆராய. நீடு ஆசனம் - பெரிய ஆசனம். 'இடந்தரும் இடந்ரும்': மடக்கணி. பரிவு - அன்பு.

* "ஞானசம்பந்த னுரைசெய் சங்கமலி செந்தமிழ்கள் பத்தும்", "பட்டிமன் றென்னன்", "மதுரைத் தொகை யாக்கினானும்" (தொகை-சங்கம்), "தண்டமிழ்நூற் புலவாணர்க்கோ ரம்மானே" (தே); "சால்பாய மும்மைத் தமிழ் தங்கிய வங்கண் மூதூர், நூல்பாயிடத்தும் முள...செய்யுண் மிக்கேறு சங்கம்", "சென் றணைந்துமதுரையினிற் றிருந்தியநூற் சங்கத்து,என்றிருந்து தமிழாராய்ந் தருளிய வங்கணர்", "திருவாலவா யமர்ந்த செஞ்சுடரைச் செழும்பொருணூல் தருவானை", "நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானை" (பெரிய.மூர்த்தி. ரு; திருநா. சுOங, சுOக; திருஞான.அஅங.) "இவை, தெற்கில்வாயில் திறவாத பட்டிமண்டபத்தோர்பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும் ஒருவன் சாவவும்பாடி இன்னவாறாகவெனச் சபித்தற்பொருட்டாய்வந்தமந்திரம் பாட்டாய் வருதலின் அங்கதமாயிற்று" (தொல். செய். சூ. கஎஅ. உரை.) [பட்டிமண்டபம் - சங்கமண்டபம்.]

(பி - ம்.) 1'இயைந்த' 2'காரணமான' 3'இருக்கவாசனந்' 4'இடந்தரு மோர்ந்து போமென்றோர்'

வாங்கருந் தெய்வப் பலகையைச் சங்க மண்டபத் திடைநடு விட்டாங், கோங்கமுன் [1]கீர ரிருந்தனர் பின்ன ருயர்புளோ ரொருவ ருக் கிருப்ப, வாங்கது வளர்தல் கண்டுநன் கபில ரிருந்தன ரன்பொடு முன்போற், [2]றாங்குதல் கொடாது வளர்ந்திட விருந்தார் பரணருந் தலமெலா மதிப்ப. (ச)

முற்றிய பயன்க ணான்கினால் விளங்கு முத்தமிழ்க் கொத்தியல் வல்ல, மற்றுள சங்கத் தவருமவ் வடைவின் வளர்ந்திட வளர்ந்திட நயந்து, நற்றவ னருளின் பெருமையை வாழ்த்தி யிருந்திட நானிலத் தோர்கள், செற்றம தகல வறிந்திடங் கொடுத்த [3]சித்திரப் பலகை யைத் துதித்தார். (ரு)

சான்றவர் தேர்ந்து தம்முடைத் தெளிவாற் சயமுறக் கோத்த செந் தமிழைத், தோன்றிய சங்க மண்டபத் தின்கட் சோர்வற வைத் துவைத் தேக, வான்றவச் செய்யுள் காலநீ ளத்தா லளவில வாய்த் தலை [4]மயங்கி, வான்றொட வுயர்ந்த வாங்கவர் திரண்டு வந்தனர் மற் றொரு காலம். (சூ)

சொல்லருஞ் சொல்லின் றகுதியாற் றம்மிற் றொடர்விடா வழக் கினுண் மலைந்து, வெல்லருந் திறத்தைக் கண்டுநந் தமிழுள் விளக்க மில் லாதனவிட்டு, நல்லன கொள்ளக் [5]கடவமென் றிபைந்து நயந் தரு பனுவலா ராய்வா,னெல்லையி லழகார் சங்கமண் டபத்து ளேறினு ருறத்தமை மதித்து. (எ)

வந்தவர் குலைந்து முன்னமே [6]கலைந்து வரையறக் கிடந்தவை யெடுத்து, முந்தவா ராயு [7]மளவிலப் பனுவன் முறைதலை மயங்கலா லழிந்து, சிந்தையா குலத்தோ டென் [8]செய்கே மெனத்தஞ் செழுமு கம் வாடலுங் கருணை, யெந்தைநா யகனும் வந்தனன் ருழா தின்றமி ழ்ப் புலவரு யிரங்கி. (அ)

---

ச. மண்டபத்திடை நடு - மண்டபத்தில் நடுவே; இடை: ஏழாம் வேற்று மையுருபு; இடைநடு - ஒருபொருட்பன்மொழியுமாம். தாங்குதல் கொடாது - தாமதியாது; கஎ: ரு.

ரு. பயன்கள் நான்கு - அறமுதலியன. முத்தமிழ்க்கொத்து - முத்தமி ழ்நூல்களின் தொகுதி; கூ, கo; கஅ: எ. நற்றவன் - சிவபெருமான். செற் றம் - தணியாக்கோபம். சித்திரம் - வியப்பு.

சூ. செந்தமிழை - செந்தமிழ்ச்செய்யுட்களை; எ. உயர்ந்த: முற்று.

எ. தொடர் - நட்பு. மலைந்து - மாறுபட்டு.

அ. இரங்கி வந்தனன்.

(பி - ம்.) 1'கீரரிருந்திட' 2'தாங்குதலாகவளர்ந்திட' 3'சிற்றரும்பலகை' 4 'மயங்க' 5'கடவதென்றெண்ணி நயன்றரு' 6'கலந்து' 7'அளவினிற்' 8'செய் தோமென'

இத்தல மதிக்கக் குற்றமி லெழுத்துச் சொற்பொருள் யாப்பலங் காரக், கொத்துறு பனுவல் வல்லவர் நீங்கள் குறைவற [1]விருந்திர் செங் கமல, மொத்தநும் முகங்கள் வாடிய தென்னை யுற்றது போக் கலா விருப்பிற், புத்தியா லளந்து போக்குவம் புகுந்த காரியம் புக லுமி னென்ன. (௯)

முதுகவிப் [2]புலவ மயங்கிய தெமக்கிம் முத்தமிழ்க் [3]கொத்துநீ கோத்து, விதியினி லளிக்க வல்லையே ஞற்பத் தெட்டெனல் விட்டு னைக் கூட்டி, யதர்பட நாற்பத் தொன்பது பேரென் றறைந்திடக் கடவமென் றியம்ப, மதியுளான் விரும்பி யிமைப்பினி லுவப்ப [4] வகைப்பட விதிப்படி கோத்தான். (௧௦)

யாவையுங் கூட்டுங் கடவுளுக் கியம்பி னிதுவுமோர் புதுமையோ மற்றப், பாவலர் நயந்து சொக்கனே போலும் பழுதற நிறைந்தவா சிரியன், கேவல னல்ல னம்மினு முயர்ந்தோ னென்றுமுன் கிளர் வுறத் துதித்து, மேவிய வரனைத் தம்மொடுங் [5]கூட்டக் கூடினன் மேதினி வியப்ப. (௧௧)

ஆங்கிடங் கொடுப்ப விருந்திருந் தமிழ்க ளாய்ந்திடுங் காலையி லொருகாற், பாங்குறு பொருளின் றகவறி யாமற் பாவலர் [6]மயங்கி டக் கண்டாண், டோங்கிய பொருணூ லன்பினைந் திணையென் றெடு த்தவ ருவப்புறக் காட்டி, வாங்கரு [7]நினைவிற் பிரித்தன னுரைத்த வண்பொருட் கியைந்த [8]வொண்டமிழ்கள். (௧௨)

---

௯. இருந்திர் - இருந்தனிர். போக்கலாவிருப்பின் - நீக்குதற்குரியதாக இருந்தால்.

௧௦. அதர்பட - வழிப்பட.

௧௧. கேவலனல்லன் - சாதாரணனல்லன்.

௧௨. பொருள் - அகப்பொருளிலக்கணம்; பொருள்நூல் - அகப்பொரு ளிலக்கணநூல். "அன்பினைந்திணை" என்பது, இறையனாரகப்பொருளின் முத ற்சூத்திரத்தின் முதற்குறிப்பு; "உலகிய னிறுத்தும் பொருண்மர பொடுங்க, மாறனும் புலவரு மயக்குறு காலை, மூன்றுறும் பெருமறை முளைத்தருள் வாக் கா, லன்பினைந் திணையென் றறுபது சூத்திரங், கடலமு தெடுத்துக் கரையில் வைத் ததுபோற், பரப்பின் றமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்குத், தெளிதாக் கொடுத்த தென்றமிழ்க் கடவுள்", "அருமறை விதியு முலகியல் வழக்குங், கருத்துறை பொருளும் விதிப்பட நினைந்து, வடசொன் மயக்கமும் வருவன புணர்த்தி, யைந்திணை வழுவா தகப்பொரு ளமுதினைக், குறுமுனி தேறவும் பெறுமுதற் புலவர்க,ளேழெழு பெயருங் கோதறப் பருகவும்,புலநெறி வழக்கிற் புணருல கவர்க்கு, முற்றவம் பெருக்கு முதற்று பதர்க்கு, நின்றறிந் துணரத் தமிழ்ப்பெயர் நிறுத்தி,யெடுத்துப் பரப்பிய விமையவர் நாயகன்" (கல்.௩,௬௬.)

(பி - ம்.) [1]'இருந்த' [2]'புலவர்மயங்கியது' [3]'கொத்துநீதேர்ந்துவிதி' [4]'வகைப்படி' [5]'கூடக்கூட்டினர்' [6]'மயக்குறக்கண்டு' [7]'நினைவில்விரித்தனன்', 'நினைவின்விதித்தனன்' [8]'வண்டமிழ்க்கள்'

நயமுறு பொருட்குப் பொருந்திய தத்த நலந்தரு மிருந்தமிழ் கண்டே, [1]யியலுடை வாணர் மகிழ்ந்ததி சயத்தோ [2]டிவையிவை யொள்ளிய வென்னச், சயமுறு கீரன் பொருமையா லங்கண் சாற் றுவா னென்[3]றனித் தமிழிற், செயிரறு [4]மைந்தாம் பனுவலுக் கொப் புச் செப்புதற் கரிதெனச் செப்ப. (கந)

வேறு.

நண்ணியவை யிடைவியந்து நவிலுவதே யொருவனெனக்
கண்ணி[5]வியன் றரும்பொருளாற் கனத்ததொரு கவிதை [6]தொடா
வுண்ணிறைந்த புலவீர்கா ளிதன்பொருள்கண் டுரைமினெனப்
பண்ணினொடு முரைசெய்தான் பாவறிந்த நாவலவன். (கச)

ஏயவழு வின்றியிலங் கிருங்கவிதை கேட்டலுமே
நேயமொடு நிறைந்திருந்தார் நேர்கொடுப்ப வுரையின்றி
யாயுமிய னக்கீர னஞ்ஞானத் தாலதனைத்
தீயதென வுரைசெய்யத் தமிழ்ச்சொக்கன் சிரித்தருளி. (கரு)

என்றுமிவன் பொருமையுள னென்னுமதிங் கியாரறியார்
வென்றியுளீ ரவன்றனக்கு வேண்டுவன விளம்பிடுக
வொன்றியநங் [7]கவிதைக்கிங் கிவனெழிய வுங்களிலோர்
நன்றியுளார் குற்றமெனிற் குற்றமது நனியென்றான். (கசா)

இத்தகைமை யியம்பக்[8]கேட் டினிமையினா லேனோரு
முத்தரமொன் றுரையாம லிருக்குங்கா லுயர்விசும்பில்
வித்தகரே நும்வழக்கு [9]விடுவிப்பான் காரணமா
வத்தனும்வந் தானுமைப்போல் விடும்விடுநு மறிவின்மை. (கள)

வணங்குமினீர் வணங்குமினீ ரெனமயக்க நீக்கிடுவா
னணைந்தருள்சேர் திருவாக்குத் தோன்றியிட வதிசயித்துக்
குணம்பயில்வோர் பயமெய்திக் கும்பிடுமு [10]னியற்கீரன்
பணிந்தடியேன் செய்தபிழை பொறுத்தியெனப் பழிச்சினனால். (கஅ)

---

கச. ஒருகவிதைதொடா - ஒருசெய்யுள் தொடுத்து; தொடுத்தவர், சிவ பெருமான்.

கரு. நிறைந்திருந்தார் - மகிழ்ந்திருந்தார்.

கள. விடுவிப்பான் காரணமா - விடுவித்தற்பொருட்டு. 'விடும் விடும்' அடுக்கு.

கஅ. 'வணங்கு மினீர் வணங்கு மினீர்': அடுக்கு.

(பி-ம்.) 1'இயலுறுவாணர்' 2'இஃதிஃதொள்ளிதென்றேத்தச்' 3'தனித் தமிழில்' 4 'அஞ்சாம்' 5 'வியந்தரும்' 6 'கொணர்ந்து' 7 'நன்கவிதையதிங்கு' 8 'கேட்டிருமையினால்' 9 'வீடறுப்பான்' 'உயர்கீரன்'

பெருமைதரும் பெயர்மதுரைப் பேரால வாயனென
வுரைசெய்தே யவைநெடுநா ளிருந்தவனவ் வயினொளிப்ப
வருளுடையார் சொக்கனைப்போ லாருளரிங் கெனத்துதித்தார்
1 பொருளதிகா ரம்பிறங்கிற் றிறையனார் பொருளெனவே. (கசு)

ஆகத்திருவிருத்தம் - ௩௦௫.



## கசு.—கிழியறுத்த திருவிளையாடல்.

உன்னரு முன்னோர் கால மோங்கலங் காரத் தோங்கி
மன்னுமா மதுரை தன்னுள் வாழுமோர் வழுதி வான்றோய்
2மின்னுமா மதிற்றன் கோயின் மீமிசை விடுத லத்துத்
தங்கிக 3ரில்லா மாதர் தம்மொடு முலாவுங் காலை. (க)

பேசருந் தகவு டைத்தாய்ப் பேருளங் கவர்வ தாய
4நேசமா தேவி வாய்ந்த கூந்தலை நீங்கா தோங்கும்
வாசமா ருதவ சத்தால் வரமன மதிச யித்திவ்
வாசிலா வாசம் பூவோ டியைந்ததோ வன்றோ வென்றான். (உ)

கூரிய வுளத்துட் டேர்ந்து குறிப்பரும் பொருள்பொ திந்து
நேர்சிறப் புடைத்தாய் நந்த நெஞ்சினுக் கியைய வின்றோர்
சீருடைக் கவிதை செய்து வருவரேற் செழும்பு விக்குள்
யாரென 5வேண்டா விப்பொ னீகுவ லவர்கட் கென்று. (ங)

ஆயிரம் பசும்பொன் கூட்டி யடங்கவோர் கிழியாய்க் கட்டி
மாயிரு ஞாலங் காண மாசிலா சிரியர் 6வாழுஞ்
சீயவெண் டாளச் செம்பொற் சித்திரத் தூணப் பத்தித்
தூயமண் டபத்து முன்னர்த் தூக்கினன் சிறக்க வாங்கு. (ச)

---

கசு. சோமசுந்தரக்கடவுள் புலவர்வடிவங்கொண்டு சங்கப்புலவருக்கு இடையே நெடுநாள் எழுந்தருளியிருந்தபொழுது, அவர்கொண்டருளிய திருநாமம், மதுரைப்பேராலவாயாரென்பது (கஅ: அ.) இது சங்கப் புலவருள் ஒருவர் பெயராகவும் காணப்படுகின்றது.

(கசு)

க. விடுதலம் - நிலாமுற்றம்.

உ. மாதேவி - பாண்டியன்மனைவி. மாருதவசத்தால் - காற்றுவழியால்.

ச. கிழி - துகிற்பொதி; ஆகுபெயர். ஆசிரியர் - சங்கப்புலவர். சீயம்- சிங்கம். தூக்கினன் - தொங்கக்கட்டினன்.

(பி - ம்.) 1 'பொருளலங்காரம் விளங்கிற்றிறைவனார் பொருளெனவே' 2 'மின்னமர்மதில்' 3'இலாதமாதர்' 4'நேசமார்தேவி' 5'வேண்டாமிப்பொ னீகுவன்' 6'வைகுஞ்'

பீடுடை யுணர்வான் மிக்கோர் பிஞ்ஞகன் சமாதி யாலே
நாடிய பொருடே ராம னல்லன தமக்கி யைந்த
பாடிய கவிதை கொண்டு பார்த்திவன் றிருமுன் னேறிக்
கூடிய மகிழ்ச்சி யோடுங் கூறினர் தேறி யாங்கு. (ரு)

காவலன் றனக்கி யைந்த கவியதிற் காணா னாகி
யாவிநன் குறுதி றுப்ப வருங்கிழி கருதி வந்த
நாவலர் சோக மெய்திப் போயினர் நாணி லத்துள்
யாவருங் காண முன்போற் றூங்கிய தியைந்த பொன்னும். (சு)

ஆங்கது தூங்க விப்பா லருள்புனை சிவனை நாளு
நீங்ககி லாமல் [1]வாழுஞ் சிவமுனி புதல்வ னீதி
யோங்கிய தூய்மை வாய்மை யொழுக்கநல் விழுப்ப மிக்கோன்
றுங்கரும் பத்தி யுள்ளோ னாமமுந் தருமி யென்போன். (எ)

தந்தைவா னுலகத் தேகத் தளர்ந்துநல் குரவா னொந்து
சுந்தரன் கோயில் புக்குச் சொல்லுவான் மெல்ல நல்ல
வெந்தையே [2]கந்தர் தந்தா யிளைத்தனன் [3]பொருளோ வில்லை
மைந்தனுண் டாக வென்னை மன்றல்செய் வித்தல் வேண்டும். (அ)

தாதையுந் தாயு முற்ற சுற்றமுந் தனமு மற்றும்
வேதனை [4]வினையி னேற்கு நீயலால் வேறு முண்டோ
கோதிலா மரபின் வந்த குலந்தலை [5]யழியு மோவென்
றோதினா யகன்றன் பாதத் தழுதுவீழ்ந் தினைய சொன்னான். (கூ)

வழுத்திய மறையோன் றன்மை கண்டவன் மனத்தி னாசை
யொழித்திடு வான்வி ரும்பி யுரகமா ணிக்கச் செம்பொற்
குழைக்கிசை காத னங்கட் கொங்குதேர் வாழ்க்கை யென்றோர்
கிழிக்கிசை கவிதை பாடிக் கொடுத்தனன் கீர்த்தி வேட்டு. (கo)

---

ரு. சமாதி - சங்கற்பம்; உங: ச; உஅ: உக; சஎ: உ.

சு. அதில் - அக்கவிகளில்; சாதியொருமை. ஆவிநன்கு - மனமகிழ்ச்சி; "என்னாவிமலர்மேன்மிதித்தொதுங்குவாய்" (சீவக. கருஅஅ.)

எ. நீங்ககிலாமல் - நீங்காமல்.

அ. தந்தை - சிவமுனி. மெல்லச் சொல்லுவான். இச்செய்யுள் கருத்துடையடையணி.

கo. 'கொங்குதேர் வாழ்க்கை' என்னுங்கவிதைவருமாறு: "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி, காமஞ் செப்பாது கண்டது மொழிமோ, பயிலி

(பி - ம்.) [1]'வாழ்வோன்' [2]'கந்தர்கோவே' [3]'பொருள்வேறில்லை' [4]'விதியினேற்கு', 'வினையனேற்கு' [5]'அழியவோ'

பொருவருங் கவிதை யேட்டைப் போற்றிமுன் கொடுபோய் வாய்
யுரியவ [1]ரவைமுன் காட்டி யோங்கிய [2]நீவி கைக்கொ [மை
டருமிகேள் பொருது மற்றுச் சாற்றிய மாற்ற முண்டேல்
விரைவின்வந் துரைமண் மெச்ச வெல்வதற் கைய மின்றே. (கக)

துன்புற லென்று வெய்ய துயரொழித் தினைய சொல்லி
யன்பொடும் விடைகொ டுப்ப வாங்கவ னீங்கி நீங்கா
வின்புறு மனத்தி னோடு மெய்திநீ டவையிற் காட்ட
நன்புளோர் வியந்தாரில்லை தம்முளே நனிந யந்தார். (கஉ)

தெரியவோ ருரைகொ டாமற் செழுங்கவி கொடுப்ப வாங்கி
யரசன்முன் செல்வ லென்றே செல்லுங்கா லறிஞர் கண்டு
விரைவொடுஞ் சென்றார் சென்ற வேதியன் காட்டக் கண்டு
பரவிய மன்ன னுள்ளப் பான்மையார் பகர வல்லார். (கரு)

வே று.

நவையின் றிநயந் த[3]பொருட் கியையச்
சுவைதந் திடுமெல் லியசொற் கணினந்
தெவர்சொன் னவரிக் கவியின் றினிதா
வவர்[4]கொள் ளுகவக் கனகக் கிழியால். (கச)

பரிவொன் றியவென் றிகொள்பா வலர்நீ
ரிரு[5]ளொன் றியதுங் களிடத் தடைவே
[6]விரைவின் கணடந் திடுமென் றுவிடுத்
தரவந் தருகோ யிலடைந் தனனே. (கரு)

மிகவின் புறுநெஞ் சுடைவே தியனுந்
தகுசங் கமடைந் துதனக் கிழியைப்
பகைவென் றனமென் றுபகர்ந் [7]தொழியா
நகைகொண் டுகவர்ந் திடுவா னணுக. (கசு)

---

யது கெழீஇய நட்பின் மயிலியற், செறியெயிற் றரிவை கூந்தலி, னறியவு முளவோநீ யறியும் பூவே" (குறுந். உ); "பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக், கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறிப், பொற்குவை தருமிக் கற்புட னுதவி, யென்னுளங் குடிகொண் டிரும்பய னளிக்குங், கள்ளவிழ் குழல்சேர் கருணையெம் பெருமான்" (கல். க.)

கக. கவிதை ஏடு-செய்யுள் எழுதப்பெற்ற ஏடு. வாய்மையுரியவர்-சங்கப் புலவர்; பொய்யடிமையில்லாப் புலவரென்றபடி. நீவி - கிழி. கொள்: ஏவல்.

கஉ. நன்பு - நன்மை. புலவர்கள் வெளிப்படையாகப் புகழவில்லை.

கரு. வேதியன் - தருமி. கரு. அரவம் - முழக்கம்.

(பி - ம்.) 1'அவர்முன்' 2'கவிதை' 3'பொருட்கவியைச்' 4 'கொள்ளுவரக் கனகக்கிழிதான்' 5'இன்றியநுங்களிடத்து' 6'விரைவின்றி நடந்திடும்' 7'ஒளியா'

வே று.

பொற்புறு மவனைக் கண்டு பொருமையா லிருந்த கீரன்
சொற்பொரு ளறியாப் பார்ப்பா னீயிதைச் சொல்லித் தந்த
நற்கவிப் புலவன் றன்னைக் கொண்டுவா நாடியுன்றன்
முற்கவி தைக்குக் குற்ற முண்டுபோ வெனமு னிந்தான். (கஎ)

ஊழுடை முனிவன் வாடி யொல்லையா லயத்து நண்ணி
யாழி[1]நஞ் சுண்ண வல்லீ ரறிஞர்க ளுமது [2]நல்ல
சூழிசைக் கவிக்குக் குற்ற முண்டென்றார் சொலவல் லீரேற்
றாழ்வறச் சொல்லி யன்றே வெங்கையிற் றருவீ ரென்றான். (கஅ)

ஈசனுங் கற்றுச் சொல்வோர் பின்வர விகலிற் கூடித்
தேசுடைச் சட்டை சாத்தித் திருமுடிச் சாத்துஞ் சாத்தி
யாசிலா மலர்க்க ரத்தி லாழிகள் செறித்தி லங்க
மாசிலாப் புலவர் தேத்து வந்தனன் புலவ னாகி. (கசு)

வருந்திநான் முகன்மா றேட வளர்ந்தழற் பிழம்பாய் நின்று
[3]னெருங்கிநீர் மண்ணும் விண்ணு மெங்கணு நிரம்பி நின்று
னரும்பொரு டரும்பே ரண்டத் தப்புறத் தப்பா னின்று
னிருந்தமிழ்ச் சங்கத் தின்கீழ் [4]நின்றன னெவருங் காண. (உ0)

மன்னுமிச் சங்கத் தேறி யிருந்தவர் தம்முள் வாளா
வென்னுடைக் கவிக்குக் குற்றஞ் சொன்னவன் யாவ னேடா
முன்னுறச் சொன்மி னென்ன முத்தமிழ்க் கீரன் கண்டு
நன்னெறிப் புலவ குற்றஞ் சொன்னவ னுன்கா ணென்றான். (உக)

வே று.

அங்கங் குலுங்க வரிவாளி னெய்யென்றோர்
பங்கக் கவிதை பரமன் [5]சொலவிளிந்து
சங்கறுப்ப தெங்கள்குலந் தம்பிராற் கேதென்றோர்
துங்க முறுங்கவிதை சொன்னா னெதிர்துணிந்து. (உஉ)

---

கஎ. பார்ப்பான்: விளி. இதை - இக்கவியை. நீ கொண்டுவா.

கசு. கற்றுச்சொல்வோர் - கற்றுச்சொல்லிகள். திருமுடிச்சாத்து - தலைக்கட்டு; "தனிமுடிச்சாத்துஞ் சாத்தி" (உரு: சூ.) ஆழிகள் - மோதிரங்கள். தேத்து - இடத்து.

உ0. பிழம்பு - திரட்சி. இச்செய்யுள், இறைவனுடைய அருமையையும் எளிமையையும் புலப்படுத்திக்கொண்டு விளங்குகின்றது. "மூவர்கட் கரியானிற்ப முத்தமிழ்த் தெய்வச்சங்கப் பாவலர் வீற்றிருக்கும் பாண்டி நன்னாடு" (கடவுள். அ) என்றார்முன்.

உக. வாளா - சும்மா.

உஉ. கவிதைகளிரண்டும் வருமாறு:—வெண்பா: "அங்கங் குலுங்க வரிவாளி னெய்தடவிப், பங்கம் படவிரண்டு கால்பரப்பிச் - சங்கதனைக், கீர்கீ

(பி - ம்.) [1]'நஞ்சுணவோவல்லீர்' [2]'வல்ல' [3]'நெருங்குநீர்' [4]'நின்றனன் புலவர்காண', 'அவருங்காண' [5]'சொலவிழிந்து'

வேறு.

இயற்சிவ னவைக்குண் மிக்க விருங்கவி வாணர் முன்னே
[1]யியற்றமிழ்க் கவிதைக் குற்ற மெங்ஙனே நவிறி யென்னச்
செயற்கருங் கூந்த ருனுஞ் சிக்குமே றுறு மேமுன்
செயற்குரித் தான செய்யா விடினெனச் செப்பி னான்முன். (உங)

மற்றது சொல்லக் [2]கேட்டே வானுறு தெய்வ மாதர்
கற்றையங் குழற்கு [3]மொக்கு மேயெனக் கடவுள் கேட்பச்
செற்றிநெய்த் திருண்டு நீண்டு தீண்டுதற் கரிய தான
வற்றருங் [4]குழற்குஞ் செய்கை யலாதிலை யியற்கை யென்றான்.(உச)

மொழியறி யாத வெய்ய மூர்க்கநீ யென்ன சொன்ன
யெழுதரி தாய கோலத் [5]திறையைந்தநங் கவுரி தன்பே
ரழகமர் கூந்த ருனு மப்படி யேயோ வென்னப்
பிழையிலை யென்று கீரன் முன்னுரை பின்னுஞ் சொன்னான். (உரு)

கண்டது நெடும்பே ரண்டங் கண்டவோ திமங்கா ணாத
விண்டருங் [6]கங்கை தோய்ந்த விரைமுடிச் சடிலங் காட்டத்
தண்டமிழ் வல்ல வென்னைச் சடைகொடு வெருட்டல் வேண்டா
மண்டல மறியு மென்றான் வல்வினை வசத்தாற் கீரன். (உசு)

தீயவெம் புரங்[7]க டந்த சேவகன் சிறிது சீறிக்
காய்தழ னெற்றிக் கண்ணைக் [8]காட்டமுன் கனன்று வேவா
[9]னேயெனச் சுற்று முற்று மெங்கணு நெருப்புக் கண்ணே
யாயினுங் குற்றங் குற்ற மென்றன னஞ்சா னாகி. (உஎ)

---

ரெனவறுக்குங் கீரனே வெண்கவியை, யாராயு முள்ளத் தவன்"; "சங்கறுப்ப தெங்கள்குலந் தம்பிராற் கேதுகுலம், பங்கமுறச் சொன்னாற் பழுதாமோ - சங்கை, யரிந்துண்டு வாழ்வோ மரனுரைப் போல, விரந்துண்டு வாழ்வ திலை." 'சங்கரனார்க்கேதுகுலம்' என்றும் பாடம். விளிந்து - நாணமுற்று.

உங. செய்யாவிடின் மேற் சிக்குறாறுமே.

உச. ஒக்குமே - பொருந்துமா. செற்றி - நெருங்கி. அல் தரும். இயற்கை இலை.

உரு. கொண்ட கொள்கை விடாமைபற்றி 'மூர்க்க' என்றார்; "மூர்க்கனு முதலையுங் கொண்டது விடா" என்பது ஒரு பழந்தமிழ்நூல் வாக்கியம்.

உசு. அது கண்டு - அதுதெரிந்து. சடிலம் - சடை. 'நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே' என்னும் பழமொழியின் கருத்து இச்செய்யுளில் வந்துள்ளது.

உஎ. ஏயென - விரைவாக.

(பி-ம்.) [1]'நயத்தவொண்கவிதைக்' [2]'கண்டு' [3]'ஒக்குமோவென' [4]'குழற்செய்கை' [5]'இயையுநங்கவுரி' [6]'கங்கைதோய்ப்பால்' [7]'கடிந்த' [8]'காட்டுமுன்' [9] 'நேயனேசுற்றுமுற்றும்'

அன்னிய ரொருவர்க் கஞ்சே [1]னஞ்சுவ னினக்கே யென்று
பின்னரு முரைப்ப வெந்தை திகைத்தவன் பேச்சைக் கண்டு
நன்னெறி [2]வழக்கே காணாய் நன்கிலா விகலை விட்டிங்
குன்னருங் கவுரி கூந்தற் கொக்குமே மற்றோர் கூந்தல். (௨௮)

வளந்தரு மடநாண் முன்னா வருங்குண நித்த மாபோ
லுளங்கவ ரிருள்வா சந்தே சுரியன நித்த மாகுந்
தெளிந்தறிந் திலையோ பேதாய் [3]சிற்புட்ப கேசி யென்று
குளிர்ந்தமா மறைக ளான்குங் கூப்பிடு கின்ற வாறு. (௨௯)

[4]இன்னபூ வாச கேசி தன்னையா ரறியா ரென்னப்
பின்னொருத் தரமு மின்றிப் பேரழற் கண்ணால் வெந்து
தன்னுளே பரித வித்துத் [5]தண்ணினீர் வேட்டுக் கூப்பிட்
டன்னமார் வாவி யிற்போய் வீழ்ந்தன னாற்று னாகி. (௩0)

காமனைக் [6]காய்ந்த கண்ணன் காலனைப் [7]பாய்ந்த காலன்
பாமறைக் கெய்தா மெய்யன் பாவலர் நாண நின்று
நாமறச் சொன்ன செற்ற நற்றமிழ்ப் புலவ னைப்பொற்
றாமரைத் தடத்துட் போகக் கண்டனன் றமிழ்க்கி ரங்கி. (௩௧)

பாந்தளஞ் சடில முக்கட் பாவல [8]னொளிப்பக் கண்டு
சூழ்ந்தவர் சொக்கன் றன்முன் சொல்லியார் வெல்வா ரென்றே
யேந்ததி சயத்தோ டஞ்சி யேத்தினர் குணலை கொள்ளா
வாழ்ந்தனன் முனிவன் றாங்கும் பூங்கிழி வாய்த்த தென்றே. (௩௨)

விரைவொடுஞ் சென்றி யாரும் வியப்பநன் கிழிய றுத்துப்
பரமனை யடைந்து வாழ்த்திப் போந்துதன் [9]பண்பிற் கொத்த
திருவினு முருவ மிக்க தேவியை மணந்து ஞாலம்
பரவவாழ்ந் திருந்தா னூழி [10]பழுதறு சிறுவர்ப் பெற்றே. (௩௩)

---

௨௮. பேச்சைக்கண்டு-சொல்லை யறிந்து: 'சொல்லக்கண்ட' (குளை: கரு.) இகலைவிட்டு வழக்கைக் காணாயென்க.

௨௯. சிற்புட்பகேசி-ஞானப்பூங்கோதை; இது, சீகாளத்தியிலுள்ள அம்பிகையின் திருநாமம்; "இன்னபூவாசகேசி" என்பர்பின்; ௩0. கூப்பிடுகின்ற வாறு தெளிந்தறிந் திலையோ.

௩௧. நாமற - அச்சமற.

௩௨. குணலை- மகிழ்ச்சி மிகுதிக்கண் ஆடும் ஒருவகைக்கூத்து. வாய்த்த தென்று வாழ்ந்தனன்; "நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி நற்கனகக் கிழிதருமிக் கருளினோன்காண்" (திருநா. தே. திருப்புத்தூர்.)

௩௩. மிக்க தேவியை. ஊழி - பலநாள்.

(பி - ம்.) 1 'அஞ்சினேனினக்கே' 2 'விளக்கே' 3 'சிறப்புறுகேசியென்று, குளுந்த' 4 'இன்னுமாமஞ்சகேசி' 5 'தண்ணநீர்' 6 'கண்ட' 7 'காய்ந்த' 8 'ஒளிப்புக் கண்டு' 9 'பணியிற்கொத்த' 10 'பழுதறச்சிறுவர்'

வேறு

திருந்திருக் குளத்தர்தந் தெள்ளு நீற்றொளி
தருந்திருக் குளத்தெழுந் தழல்சு டத்திரை
பொருந்திருக் குளத்[1]துறு புனலிற் போய்விழும்
பெருந்திருக் குளத்துளான் பின்னென் செய்தனன். (நுச)

ஆகத்திருவிருத்தம் - நுநுக.

---

## கள.—நக்கீரனைக் கரையேற்றின திருவிளையாடல்.*

இன்ப நாவல ரிடர்படு கீரனுக் கிரங்கி
யன்பர் தம்பிழை பொறுப்பவற் கறைகுவ மென்றே
துன்ப நெஞ்சொடுந் தொல்லையா லயத்[2]தணைந் தலகி
னன்பு கூர்தமிழ் நலமுற [3]நவின்றுமுன் றுதித்தார். (க)

துய்ய கீரன்முற் சூழ்வினை யாலறி யாமை
மையல் கொண்டுநின் முன்சில வார்த்தைக ணவின்று
னைய னேயருள் வாரியே யருந்தமி ழரசே
தையல் பாகனே பொறுத்தரு டமியரை வேண்டி. (உ)

---

நுச. திருந்து இருக்கு உள் அத்தர் - திருந்திய வேதம் தியானிக்கின்ற தலைவர். திரு குளத்து - அழகிய நெற்றியில். திரை பொரும் திருக்குளத்து - அலைகள்மோதுகின்ற பொற்றாமரையில். உளத்து பெருந்திருக்கு உள்ளான் - உள்ளத்திற் பெரிய மாறுபாட்டையுடைய நக்கீரர். இச்செய்யுள் திரிபு.

(கள)

* "சிறியேன் சொன்ன வறிவில் வாசகம், வறிதெனக் கொள்ளா யாகல் வேண்டும், வெறிகமழ் கொன்றையொடு வெண்ணில வணிந்து, கீதம் பாடிய வண்ணல், பாதஞ் சென்னியுட் பரவுவன் பணிந்தே" (கக - ம் திருமுறை- நக்கீரர் திருவெழுகூற்றிருக்கை); "பணிந்தேனின் பாதம் பரமேட்டி பானீ, றணிந்தால வாயி லமர்ந்தாய் - தணிந்தென்மேன், மெய்யெரிவு தீரப் பணித்தருளு வேதியனே, யையுற வொன்றின்றி யமர்ந்து" (ஷை. ஷை. இறுதிவெண்பா); "கூட லாலவாய்க் குழக னவ, தறியா தருந்தமிழ் பழித்தன னடியே, னீண்டிய சிறப்பி னிணையடிக்கீழ் நின்று, வேண்டு மதுவினி வேண்டுவன் விரைந்தே" (ஷை. பெருந்தேவபாணி); "விரைந்தேன்மற் றெம்பெருமான் வேண்டியது வேண்டா, திகழ்ந்தேன் பிழைத்தே னடியேன்- விரைந்தென்மேற், சீற்றத்தைத் தீர்த்தருளு தேவாதி தேவனே, யாற்றவுநீ செய்யு மருள்" (ஷை. ஷை. இறுதி வெண்பா.)

(பி-ம்.) [1]'எழுபுனலில்' [2]'அடைந்தகில நன்குகூர்தமிழ்' [3]'நவின்றுபின்'

ககன மீதுதோய் கொடுமுடிக் கயிலைகா ளத்தி
யகில மீதுபே ரன்புடைப் பதியென வறிந்தே
முகைகொ டாமரைத் தடத்திடை மொய்ம்பறக் கிடந்து
சகமெ லாம்புகழ் தருமொரந் தாதியு முரைத்தான். (ங)

ஓங்கு பேரரு ளங்கயற் கண்ணிதன் னுடனே
யாங்கு சென்றடைந் தருந்தமிழ்ப் பெருந்துதி கேட்டுத்
தீங்கி லாத[1]நின் செழுமலர்த் திருக்கரங் கொடுத்தே
[2]பாங்கர் நீள்கரை யேற்றெனப் பகர்ந்தனர் பழிச்சி. (ச)

வே று.

ஆங்கவர் பணியத் திருவுளத் திரங்கி யங்கனே யொடுமெட வன்னந், தூங்கலர் வாவிக் கரையடைந் திருந்து சொல்லெனுஞ் செழுந் தமிழ்கேட்டுப், பாங்குடை யுளஞ்சேர் நிறைவொடு நீங்காப் பரிவொடு முறுவல்கூர்ந் திமைப்பிற், ருங்குதல் [3]கொடாது மலர்க்கரங் கொடுத்துத் [4]தடத்தினின் றடுத்தினி தெடுத்தான். (ரு)

மாலய னறியா வடிவமுங் காட்டி வன்னிவெந் துயரமு மொழித்து
ஞாலமேழ் புகழுஞ் சான்றவ ருடனே நணுகுதி நாவலர் தம்முட்
சாலவு நல்லே மசைவிலா மனஞ்சேர் தண்டமிழ்ப் பாவல வென்றுங்
கேலவார் குழலி தன்னொடுமறைந்தா னடியவர்க் கெளியவெம் பெருமான்.

சேணுளார் போற்றப் பெற்றநக் கீரன் றிருவருட் பெருமைகண் [5]டன்பிற், பூணவா லயத்துச் சென்றடி பரவிப் [6]போவதங் கில்லென நிற்ப, நீணெறி யறிஞ ரரியதாள் வருந்த [7]நிற்பதே யிருப்பதாய்க் கடையேந், தாணுவே யென்று பன்முறை பணிந்து போயினுர் சங்கமண் டபத்து. (எ)

ஆகத்திருவிருத்தம் - ருசசு.

---

ங. ஓர் அந்தாதி - கயிலைபாதி காளத்திபாதியந்தாதி. "அருந்தமிழ்க் கீரன் பெருந்தமிழ்ப் பனுவல் வாவியிற் கேட்ட காவியங் களத்தினன்" (கல். ருஉ) என்பதனாலும் நக்கீரர் வாவியிற் கிடந்தபடியே அந்தாதிபாடினமை விளங்கும்.

ச. பழிச்சி - துதித்து.

ரு. மேற்கூறிய அந்தாதியின் முதல்வெண்பாவின் முதல், "சொல்லும் பொருளுமே" என்பதாதலின், 'சொல்லெனுமருந்தமிழ்' என்றார். தாங்குதல் கொடாது - தாமதியாமல். அடுத்து நின்று தடத்தினின்று இனிதெடுத்தானென்க.

சு. வன்னியென்றது நெற்றிவிழித்தீயை. சான்றவர் - சங்கப்புலவர். 'அடியவர்க்கெளிய வெம்பெருமான்' இங்ஙனமே சோமசுந்தரக்கடவுளின் திருநாமம் 'அடியவர்க்கெளியசுந்தரன்', 'அடியவர்க்கெளியசொக்கன்', 'அடியவர்க்கெளியவர்' என்று இந்நூலில் பலவாறு காணப்படுகின்றது. [சங்கப்புலவர்.

எ. பூண - தொண்டுபூண. 'அங்கு' என்றது சங்கமண்டபத்தை. அறிஞர்-

(பி - ம்.) [1]'நன்செழுமலர்த்' [2]'பாங்குநீள்' [3]'விடாது' [4]'தடத்தினினிடத்தினின்று' [5]'அற்பிற்' [6]'போவதெங்கேயென' [7]'நிற்பதென்'

## ௧௮.—குறுமுனிக்குத் தமிழுரைத்த திருவிளையாடல்.

சோதிசேர் கடவு ளானுந் தொண்டுசெய் கீரற் கண்டாண்
டோதுசொல் லிலக்க ணங்கள் குறையுமொண் கவியுங் குன்று
மாதலா லாங்கா ரித்தே யறிஞரை யிகழா நின்றான்
போதமார் செய்ய வல்லா ரென்றலும் பொருப்பின் பாவை. (௧)

அண்ணலே யடியேன் முன்ன மறிந்ததோர் கதையுண் டன்பிற்
கண்ணுறு செவியு நெஞ்சுங் களிதரு வதுகே ளெண்ணில்
பண்ணுறு கின்ன ராதி [1]பரவயாம் பரிந்து வெள்ளி
விண்ணுறு கயிலை யந்தண் வெற்பகத் திருக்கு நாளில். (௨)

வேறு.

வாய்ந்தபுவி வடகிழக்குத் தாழ்ந்து தென்றல் வரைபயிறென் மேற்குயர வானோர் மண்ணோர், தேர்ந்தவிரு டிகளியக்கர் சித்தர் நாகர் சேர்ந்தபய மென்றுபய மெய்திப் போற்றித், தாழ்ந்ததல மொத் திருப்பா னின்போ லாக்கிச் சங்கரா வொருவரையங் கேவி டென்ன, வாய்ந்தவர்கள் பயங்கண்டு கருணை கூர்ந்து னருட்கமல மலர்க்கரத்தா லஞ்ச லென்றே. (௩)

எண்ணரிய தொகுதியெலா நிற்ப நின்போ லிய[2]லொப்ப வகத்தி யனைத் திருக்கண் சாத்திப், புண்ணியமா முனிவர[3]நம் போல நீயப் புவிமூலை யுயராமற் போகித் தென்றல், [4]விண்ணிவரு மலயத்தி லிரு த்தி யென்று விளம்புங்கா லுளங்[5]குளிர்ந்து விண்ணோர் முன்னாக், கண்ணுதலே யருட்கடலே யருள்பு ரிந்த காரியநன் றென்றுகழல் வணங்கி னான்றால். (௪)

ஆதரஞ்சேர் குறுமுனியு மெனையொன் றாக்கி யருள்செய்தா [6]யருள்செய்த படியே செய்வ, லோதருந்தென் பூமிதமிழ்ப் பூமி யென்பா ரொண்டமிழிற் குரியவெலா மடிமைக் கிங்கே, போதமுற வறிவித்தல் வேண்டு மென்று போற்றுங்கா லெழுத்துச்சொற் பொ ருண்முன் னான, நீதியுடைச் சூத்திரங்க ளறியும் வண்ண நெறியின்க ணறிவித்தாய் [7]நேசங் கூர்ந்தே. (௫)

நற்[8]றமிழ்நூற் கருத்தினைநாம் விரும்பி வாழு நன்கடம்ப வனத் துனக்கு நவில்கின் றேமென், றுற்ற[9]முனிக் கினையதனித் தருளிச்

௧. போதம் - போதித்தல்.

௩. தென்றல்வரை - பொதியில். சேர்ந்து அபயமென்று.

௫. "ஆதியிற் றமிழ்நூ லகத்தியற் குணர்த்திய, மாதொரு பாகனை வணங் குதும்" (தனிச்செய்யுள்), "தழற்பொலி விழிக்கடவு டந்ததமிழ் தந்தான்" (கம்ப. அகத்திய.) என்பவை இங்கே அறியற்பாலன.

(பி - ம்.) 1 'பாவையர்பரிய' 2'ஒப்பாமகத்தியனைத்' 3'நம்போலுநீயம்பு விமூலை' 4'விண்ணமரும்' 5'குளிர்ந்து' 6'அடிசெய்த' 7'நெஞ்சங்' 8'தமிழுநூற்' 9 'முனிக்கதனையளித்தருளிச்செய்து'

செய்தாண் டுவகையொடும் விடைகொடுத்தா யென்றி றைஞ்சப், பொற்றவது தனைக்கேட்ட பத்தர் பத்தன் புகழ்க்கினியா னயந்து வியந் தொக்கு மொக்கு, மற்றுநிக ரொவ்வாத மடமா தேயான் மறந் தனனீ நினைந்திருந்தாய் வழக்கு நன்றே. (சு)

தென்மலயக் குறுமுனியை யொழிய மண்ணிற் [1]செழுந்தமிழ்க் கொத் தறிவிக்க வல்லா ரில்லை, மன்னியகீ ரனுக்கவன்ற னாலே யின்று வண்டமிழ்[2]நூ னிறைவிக்கத் தகுவ தென்று, ஞுன்னுமுணர் வுண் டாகத்தான் [3]மெய்ஞ் ஞான வுபதேசந் திருநோக்கா லுபதேசித்தாண், டன்னவனை நயந்தழைப்பத் தாழா தெய்தி யருமறைநூல் விதியின் மல ரடியில் [4]வீழ்ந்தான். (எ)

வந்தனைசெய் தருந்தமிழ்ச்சூத் திரம்போ தித்தென் மனமயக்க முள்ளவற்றை மாற்றி டென்ன, வெந்தைபிரான் மதுரைப்பே ரால வாயா னிரங்கியிரு செவிப்புலனு நிறையும் வண்ணம், புந்தியுள வகத் தியமா முனியே நல்ல போதமுறக் கீரனுக்கிவ் வுபதே சத்தைச், சிந் தையுற நாமுரைத்த படியே நீயுஞ் செப்புகெனத் திருநோக்கா லுப தே சித்தான். (அ)

[5] பார்வையினு லுபதேசஞ் செய்த பின்னர்ப் பண்டையினு மிக் கவறி வுடையோ னாகிப், [6]பூரணனு யடிதொழுது நின்று மிக்க போத முறக் கீரனுக்[7]கவ் வுபதே சத்தைச், சீர்மையொடு முபதேசஞ் செய் யக் கண்டு திருவுள்ள மிகமகிழ்ந்து [8]பரிசஞ் செய்தே, யார்வமொடும் விடைதரமெய்க் குருவா மெந்தை யடிபரவி மலயகிரி யடைந்தா னன்றே. (கூ)

வே று.

மன்னு மன்னுழை போய பின்னர் வணங்கி யாதர மாதராண்
முன்ன மேவிய கீர னுக்குப தேசி யேனென முதல்வநீ
சொன்ன தென்னையெ னத்தி ருந்திய தூய்மை மேவிய வாய்மையா
னன்ன மேயது கேளெ னக்கடி தன்பி னோடு[9]ருள் செய்குவான். ()

அரிய வொண்பொரு ளீப வர்க்கடி மைத்தி றம்புரி வோர்களுக்
குருகு நெஞ்சுள வர்க்கி தந்தரு முட்பொ ருமையி லாதவர்க்

சு. பொற்ற-பொலிவுபெற்ற. 'பத்தர்பத்தன்' : உச: ச; ௬௧: சக; 'ஒக்கு மொக்கும்': அடுக்கு.

கூ. பரிசஞ்செய்து - தீண்டி.

க௦. அன்னுழை-அவ்விடம்; "அன்னுழை யுமையவ ளகத்துளோர் செயன் முன்னி" (கந்த. பார்ப்பதி. க.) வாய்மையான் - சிவபெருமான்; எழுவாய்.

(பி - ம்.) 1 'செந்தமிழ்' 2 'நூலறிவிக்க' 3 'மெய்யான' 4 'வீழ்ந்தே' 5 'பார்வையால்' 6 'பூரணமாய்' 7 'இவ்வுபதேசத்தைச்' 8 'பரிவுஞ்செய்தே, யார்வினொடும்' 9 'அருளிச்செய்வான்'

கிருட ரும்பொய்க டிந்த வர்க்கிக ழாத வர்க்கரு ளேதருங்
குருவி னுள்ளம றிந்த வர்க்குப தேச மீகை[1]கு ணந்தரும். (கக)

இக்கு ணங்களி லாத வர்க்குப தேச மீகைத காதுகாண்
மிக்க கீர னயந்து தன்னைவி யந்து நானெனு மேன்மையா
னக்க ரம்பிறர் கண்பொ ருதவ னாத லாலவ னுக்குநாந்
தக்க வித்தைகொ டுத்தி லேமென வொக்கு மென்றன டையலும்.()

இனிமை [2]கூர்தரு நூலி னுக்கிய லேய மூன்னுற [3]நின்றபின்
றனையொ வானுரை செய்த செய்யுளுந் தானு ரைத்தத மிழ்க்களு
[4]நினையு நீதியை [5]யாழ்ந்து கண்டுத னீடு செய்யுளை நிந்தியா
மனாரு லானுரை செய்த செய்யுளை வாழ்த்தி னானிரு ணீக்கினான். ()

தென்ற மிழ்க்குரு வெந்தை கண்டுசி ரித்து நல்லது ரைத்துமுன்
னின்று சங்கம தெய்தி டென்ன [6]நிறைந்து சங்கம தெய்தியே
தன்றி ருக்க[7]கல் வித்தல் செய்துத மிழ்க்கண் மெல்லவி ரித்தன
னின்ற நாவலர் கண்டு மாசறு நேச வீசனை வாழ்த்தினார். (கச)

ஆகத்திருவிருத்தம் - ௩௯௦.

## கக.—* ஊமை தமிழறிந்த திருவிளையாடல்.



அறிபவ னெங்கு முள்ளா [8]னாலவா யமுத வாக்க
னிறையவன் முன்னஞ் சொன்ன விரும்பொருட் சூத்தி ரத்திற்
குறுமுரை யெழுதித் தத்த முரையினை வியந்தோர் கால
மறுவறு [9]கவிதைச் சான்றோர் மலைந்தனர் மாறு பட்டே. (க)

சொல்லுநம் முரைய னைத்துஞ் சோர்வற நன்னா லெல்லாம்
வல்லவன் றிருமுன் சொன்னான் மகிழ்ந்தவ னிவற்றுட் டேர்ந்து
நல்லதென் றுரைத்த தொன்றை நயந்திடக் கடவ மற்றைப்
புல்லிய வுரையை விட்டென் றனைவரும் பொருந்தி னரால். (உ)

---

கக. "தன்மக னாசான் மகனே" என்னும் சூத்திரப் பொருளைப் பெரும்பாலும் இது தழுவியது. [சகியாதவன்; அக்கரம்: ஆகுபெயர்.

கஉ. பிறர்கண் அக்கரம் பொறாதவன் - பிறரிடமுள்ள வித்தையைச்

கங. தமிழ்க்களும் - செய்யுட்களும். இருணீக்கினான் - நக்கீரர்.

(கக)

க. "ஆலவாயமுதே": "ஆலவா யமுத வாயான்" என்பர் பின்னும்; உ0: ௩; உ௭: க. பொருட்சூத்திரத்திற்கு - இறையனாரகப்பொருட்சூத்திரத்திற்கு. ஒருகாலத்தில்.

* "மணிக்கா லறிஞர் பெருங்குடித் தோன்றி, யிறையோன் பொருட்குப் பரணர்முதல் கேட்பப், பெருந்தமிழ் விரித்த வருந்தமிழ்ப் புலவனும், பாயபாரறிய நீயே யாதலின்" (கல். முருகர்துதி.)

(பி - ம்.) 1 'குணந்தகும்' 2 'கூர்ந்தரு' 3 'நின்றபின்' 4 'நினைவுநீதியை' 5 'ஆய்ந்து' 6'நிறைந்தசங்கமது' 7 'அகல்வித்தசெய்ய' 8 'ஆலவாயழகார்சொக்கன்' 9'கவிதைசான்றோர்'

ஆங்குய ரால யத்து ளஞ்சலி செய்து சென்று
பூங்கம லத்தா ளேத்திப் புலவகே ளிவற்று ளாராய்ந்
தீங்குரை நல்ல தொன்றை யருளுதி யெமக்கென் றியாரு
மோங்கமுன் றமு ரைத்த வுரையுரை யாலு ரைத்தார். (௩)

தென்றமிழ்ப் புலவ ராகிச் சேர்ந்தியல் வாண ரின்று
நன்றுநீர் நவின்ற திவ்வூர் நம்முடைப் [1]பத்த னாகி
யொன்றிய [2]வணிக னுப்பூர் கிழார்மக னாமன் பாலன்
றன்றிற முரைப்பின் வென்றிச் சரவண குகனே யாகும். (௪)

உவமையின் ஞானி நாம முருத்திர [3]சன்ம னென்போ
னவையிலா வுரைய னைத்து மவன்றன்மு னவின்று லொன்றை
யவையிடைக் கைக்கொண் டானே லஃதுரை யைய மில்லை
கவலுற வேண்டா வென்னக் கண்டவர் தொண்டிற் போற்றி. (௫)

தோன்றுநாட் டொடங்கி யூமன் சொற்றர [4]வலனே வென்ன
வேன்றசெந் தமிழ்தேர் [5]செட்டிக் கியாதொரு செய்யுள் கேட்டாற்
றோன்றிய [6]புளக மெய்யுந் துளிபடு கண்ணு முண்டோ
வான்றவச் செய்யுள் செய்யு ளல்லது செய்யு ளன்றே. (௬)

ஒருவரு மிகல வேண்டா வொத்துநம் மிடத்தி ருத்தி
[7]வரனுறக் கேண்மி னென்றே மறைந்திட [8]மலைதல் விட்டிங்
கிருவரு மறியா வெந்தை [9]யிலங்கிட நம்போல் வந்து
பரிவொடும் பகரப் பெற்றேம் பகர்ந்ததே செய்வ மென்றார். (௭)

பத்தியிற் [10]போந்து தெய்வப் பாவறி மண்ட பத்துச்
சித்திசேர் மூங்கை தன்னைச் சிறப்பொடு மழைத்துச் [11]சிங்கச்
சுத்தமார் தவிசி னேற்றித் தூபதீ பாதி நல்கி
யொத்துமுன் றமு ரைத்த வுரையெலா முரைத்தா ரோங்க. (௮)

---

௪. இயல்வாணர்: விளி. உப்பூர்கிழாரென்பது உருத்திரசன்மனுருடைய தந்தையார் பெயர். உப்பூர்: பரம்பக்குடிக்கு ஈசானத்திலுள்ளது.

௫. உருத்திரசன்மனென்பதற்கு, உருத்திரனலடைந்த பிறப்பையுடையவனென்பது பொருள். இந்தவரலாறு ௨௨ - ஆம் திருவிளையாடலாலும், "திருத்தமிழ் மதுரைதன்னிற் சிவன்பொரு ளிறுக்கு மாற்றால், உருத்திர சன்மனாகி யுற்றிடு மிமலன்" (கந்த. சூரபன்மன்வதை, ௨௬௧) என்பதாலும் இறையனாரகப்பொருளுரையாலும் நன்கு விளங்கும்.

௬. யாதொருசெய்யுள் - எந்த உரையை; உரையும் செய்யுளென்று வழங்கப்பெறும்; "இலக்கண மிலக்கிய முறையெனப் பெயர்பட், டிருக்குமென் றெண்ணுக செய்யுளி னியல்பே" (இ. கொ. ஒழி. ௪௫.) என்னும் சூத்திரத்தாலும் அதன் உரையாலும் உணர்க. உண்டோ - உண்டாமோ.

௮. பாவறி மண்டபம் - சங்கமண்டபம்.

(பி - ம்.) [1]'பத்தாகி' [2]'வணிகர்' [3]'சருமன்' [4]'வற்றே' [5]'செட்டியாதொரு' [6]'புளகுமெய்யும்' [7]'வரலுறக்' [8]'மறைதல்விட்டு' [9]'இலங்கநம்போலும் வந்து' [10]'பொருந்து' [11]'சங்கச்'

வேறு.

[1] வளமுறு கீரன் றரைபுகழ் கபிலன் மாசறு பரணனிம் மூவர், தளர்வறு முரையைக் கேட்டலு மூங்கை தணிவரு பெருவிருப் பெய்திப், புளகித மெய்யுந் துளிபடு கண்ணும் பொருந்தல்கண் [2]டதிசயித்தியாரு, முளம்வரும் பொருளிப் பொருள்கடா மென்றே யொப்பருமப்பொருள் கொண்டார். (௯)

தலமிசை யெங்கும் விரித்தியற் சொக்கன் றகைமையை மிகமிக வாழ்த்தி, யலகிலா வூழி யிருந்தன ரிருந்த வருந்தமிழ்ச் செட்டியாஞ் செட்டி, யிலகிய மயின்மீ தறுமுகத் தோடு மினியபன் னிருகரத் தோடும், புலவர்கண் டிறைஞ்ச வருளினால் விளங்கிப் போயினான் [3] சாபமு நீங்கி. (௧௦)

ஆகத்திருவிருத்தம் - ௩௭௦.

---

## ௨௦.—இடைக்காடன்பின் போன திருவிளையாடல்.

முன்னமோர் நாளுன் மாட மதுரையின் முழுது ணர்ந்தோன்
பின்னமில் கபிலன் றோழன் பெயரிடைக் காட னென்போ
னின்னியல் வாணர்க் கெல்லா மிதவியோன் [4]கவியான் மிக்கோன்
றென்னனைக் கவிதை பாடிக் கண்டனன் சிறப்பி னெய்தி. (௧)

நன்கவி கேட்ட வேந்த னென்னு மதத்தாற் போவென்
றன்புசெய் யாமற் றள்ள வாங்கவன் கண்டு நாணி
முன்பொருத் தரமுஞ் சொல்லான் முற்றிய துயரிற் போந்தின்
றென்பொலா மணிக்குச் [5]சொல்வ லென்றிறை கோயில் புக்கான். ()

---

௧௦. செட்டி - வணிகன், முருகக்கடவுள்; "செட்டியுஞ் செட்டி யாயுதித்தான்" (௨௨: ௯).

(௨௦)

௧. "தோழனுங்கபிலன்" என்பர் பின்னும்; ௫. இதவியோன் - இன்பத்தைச்செய்பவன்; "இதவிய புல்லு மிட்டேம்" (௨௯: ௬.)

௨. பாண்டியன் இடைக்காடரைத் தள்ளியது, "உன்னுடை மதத்தாற் றள்ளி யோட்டிய தென்னை" (௧௧) என்பதனாலும் துணியப்படும். பொலா மணி = பொல்லாமணி - துளையிடாதமணி; சிவபெருமான்; "புகவே தகேனுனக் கன்பருள் யானென்பொ லாமணியே" (திருவா. திருச்சத. ௧௦); "என்பொலாமணியைப் புணர்ந்தே" (திருவா. புணர்ச்சி. ௧); "என்பொலா மணியையேத்தி" (திருவா. அச்ச. ௩); "என்பொலா மணிமன மிரங்கிற் றென்பவே" (பிரபு. முனிவர். ௬.)

(பி - ம்.) 1 'வளனுறு', 'வளர்வுறு' 2 'அதிசயித்தாரும்' 3 'சாபமுநீக்கி' 4 'யார்க்குமிக்கோன்' 5'சொல்வனென்று'

மன்னிய சொல்லுன் மாது மாசறு பொருணீ யுண்மை
[1]யென்னநின் றரற்றும் வேத மாதலா லெனையோ வல்ல
வன்னமா ராய வொண்ணு வாலவா யமுதே தென்ன
னின்னையு நின்னை நீங்கா மின்னையு நிந்தை செய்தான். (௩)

தக்கதோ வெனத்து தித்துத் தனித்துணைத் தேகக் கண்ட
சொக்கநா யகன்மா தோடுந் துண்ணென நடுக்க முற்று
மிக்கமா நிலனுஞ் செம்பொன் மேருமால் வரையு [2]மற்றெண்
டிக்கும்வா னகமு நோவ நொந்திரு செவிபு தைத்தான். (௪)

தொழுதுபோ மிடைக்கா டற்குந் தோழனுங் கபில னுக்கு
மெழினலங் கூர யாமு மெய்துவ [3]மின்னோ டென்று
செழுமதில் வடபால் வையைத் திருநதித் தென்பான் மேவப்
பழுதறு சங்கத் தாரு மேவினார் பாதம் போற்றி. (௫)

மறுவறு முனிவர் வானோர் வணங்கியின் னருளை வாழ்த்திக்
குறைவறு சங்கத் தோடுங் கூடியாங் கிருப்ப விப்பா
னெறிபட வணங்குந் தொண்டர் நேர்படப் புலரு முன்ன
மிறைவனைத் தொழுவான் வந்தார் கண்டிலர் திகைத்தா ரேங்கி. (௬)

மண்மிசைப் புரண்டார் வீழ்ந்தார் மயங்கினார் முகத்த றைந்தார்
கண்ணினீர் சோர வாய்விட் டலறினார் கைவி திர்த்தா
ரண்ணலே யெங்கொ ளித்தா யரசனீ தறிந்தா லென்னா
மெண்ணமொன் றிலாம லந்தோ விளைந்ததே யென்னோ குற்றம். (௭)

அவனிவேந் தற்குத் தாழா தறைகுவ மென்று சென்று
தவமுடை வேந்தே நந்த மாலவாய்த் தரும மூர்த்தி
புவிபுகழ் கோயில் விட்டுப் போய்நதிக் கரையி லேறிக்
கவிமன ரோடு மங்க ணிருக்கின்றான் கண்டா யென்றார். (௮)

செப்பிய மாற்றங் கேட்ட தென்னன் மெய்ந் நடுங்கி வீழா
மெய்ப்படு பயத்தி னோடு மேதகு மாதி னோடு
மொப்பரு மமைச்ச ரோடு மொல்லைகா னடையிற் [4]சென்றிங்
கிப்படி போதற் கென்னோ குற்றமென் றிறைஞ்சி வீழ்ந்தான். (௯)

---

௩. இதில், சொல் உமை, பொருள் சிவபெருமா னென்றதை, "என்னை யிகழ்ந் தனனோசொல் வடிவாய்நின் னிடம்பிரியா விமயப் பாவை, தன்னையுஞ் சொற் பொருளான வுன்னையுமே யிகழ்ந்தனன்" (திருவிளை. இடைக்காடன். ௧௦) என்பதனாலுமுணர்க.

௫. மின் - உமாதேவியார். மேவ - சிவபெருமான் எழுந்தருள; "முன் னிடைக்காடன் பின்னெழ நடந்து" (கல். எ௯.)

௭. எண்ணமொன்றிலாமல் - புத்தி பூர்வமின்றி.

௮. கவிமனர் - கவியரசர்; சங்கப்புலவர். ௯. கால் நடை.

(பி-ம்.) 1'என்னுமதாற்றும்' 2'எண்ணெண்டிக்கும்' 3'நின்னோடென்று' 4 'சென்றங்கு'

நெஞ்சம்[1]வே றாகி மால்போ னின்றுகண் ணருவி சோர
வஞ்சியுந் தானும் வாழ்த்த [2]வானவர் துதிக்கு மேலோன்
பஞ்சவ வெனக்கு னைப்போற் பத்தர்க ளில்லை யிந்த
மிஞ்சிய தலமுங் கிஞ்சில் விருப்புடைத் தலமே யாகும். (க௦)

நின்னொடு [3]செற்ற மில்லை நெறிதர வெனையந் தாதி
சொன்னவன் கபிலன் றோழன் சொல்லிய கவிதை [4]சற்று
மன்னிய பொருளாற் சொல்லால் வழுவிலா [5]திருப்ப வோரா
துன்னுடை மதத்தாற் றள்ளி [6]யோட்டிய தென்னை நென்னல். (கக)

கல்வியிற் சிறந்தி ருப்பக் காரண மின்றிக் குற்றம்
புல்லர் போ [7]லுரைத்தா யின்று போதுமோ வுனக்கெ மக்கு
நல்லவன் வந்து சொல்ல நமக்குநம் புடைமா துக்குஞ்
சொல்லிட வரிது [8]நேர்ந்த தென்றலுஞ் சோர்ந்து வேந்தன். (கஉ)

என்னறி வின்மை தன்னை யெந்தையே பொறுத்தி யென்று
மின்னொடு [9]பின்னுந் தாளில் விழப்பிழை [10]பொறுப்போ னறி
யின்னியல் வாண ரோடு மின்றிடைக் காட னோடு
மன்னவ வருவல் போவென் றரசனை விடுத்தான் வாழ்த்தி. (கங)

சேர்ந்தநன் புலவ னோடுந் தென்றிரு வால வாயிற்
சார்ந்தநா வலர்களோடுஞ் சார்ந்தனன் றலந்து திப்ப
வாய்ந்தவத் தலத்தி னுமம் வடதிரு வால வாயென்
றார்ந்தது [11]கண்ட தொண்ட ராடினர் பாடி னரால். (கச)

பொன்முடி மன்னன் வந்து பொருந்திடைக் காடற் போற்றி
யென்னையா ளுடையா [12]னின்பி னெய்தினு னென்று முன்னர்ப்
பன்னிய தமிழ்கொண் டோடைப் பருப்பதத் தெருத்தத் தேற்றி
மன்னவ ரென்ன வாழ்வித் [13]தருளினன் வரிசை கூர. (கரு)

ஆகத்திருவிருத்தம் - ௩அரு.

---

க௦. வஞ்சியும் தானும் - தேவியும் தானும்; "மின்னொடுபின்னுந்தாளில் விழ" (கங.) கிஞ்சில் = கிஞ்சித் - சிறிது; இது, மலைநாட்டுவழக்கு.

கக. அந்தாதியென்றது, சிவபெருமான்திருவந்தாதியினை; இது, கக-ஆம் திருமுறையிலுள்ளது. சொன்னவனாகிய கபிலன். என்னை - யாது.

கஉ. உனக்குப் போதுமோ - உனக்கு இத்தன்மை உண்டாதல் தகுமோ. நமக்கும் நம்புடை மாதுக்கும் நேர்ந்த துன்பம் சொல்லிட வரிது.

கச. நன்புலவன் - இடைக்காடர். வடதிருவாலவாய் - இஃது இடைக்காடருடைய பிணக்கைத் தீர்க்கும்பொருட்டுச் சோமசுந்தரக்கடவுள் எழுந்தருளியிருந்தவிடம்; இக்கோயில் இக்காலத்துப் பழையசொக்கநாதர் கோயிலென வழங்குகின்றது. [டல்கள்.

கரு. முன்னர்ப் பன்னியதமிழ் - இடைக்காடர் முன்பு பாடியதமிழ்ப்பா ஓடைப்பருப்பதத்து எருத்தம்-யானைப்பிடர்.

(பி - ம்.) 1'வேறாய்மால்போல்' 2'மன்னவர்துதிக்கு நல்லோன்' 3'செற்ற முண்டோ நெறிதொட' 4'மற்று' 5'இருப்பதோராது' 6'ஒட்டினையென்னை' 7 'உரைத்தலின்று' 8'கொந்ததென்றலுஞ்' 9 'மின்னுந்தாளில்' 10 'பொறுப் போனாகி' 11'கண்டுதொண்டர்' 12'அன்பின்' 13'அருளினனருளை வாழ்த்தி'

